ஓம்

ஸ்ரீ கர. சிவப்பிரகச சுவாமிகள்

---

# துறவறத்தின் பெருமை





**சரஸ்வதி சங்கம்**

28, பிடாரியார் கோயில் தெரு

சென்னை

---

எல்லா மதங்களுக்கும் வேதாந்தம் தலை.

ஞானயோகமே சிறந்த யோகம்.

ஜீவகாருண்ணியமே நாராயணனைக் காட்டும்.





ஓமித்யேததக்ஷரம் ப்ரஹ்ம

சர்வமிதம் ப்ரஹ்ம





ஸ்ரீ கர. சிவப்பிரகாச சுவாமிகள்.

வியாசர்பாடி, சென்னை.

அயமாத்மா ப்ரஹ்ம

தத்ப்ரஹ்மாத்வயமஸ்ம்யஹம்

ஓம் தத் ஸத்

# ஸ்ரீ கா. சிவப்பிரகாச சுவாமிகள்

## வியாசர்பாடி, சென்னை.

ஸ்ரீ கா. சிவப்பிரகாச சுவாமிகளின் சிஷ்யர்களில் ஒருவராகிய காலஞ் சென்ற K. நாராயணசாமி நாயுடு அவர்களால் எழுதப்பட்ட வரலாற்றை அப்படியே இங்கு எழுதப்பட்டுள்ளது.

ஈசுவரன் பலவிடத்தில் வெவ்வேறு காலங்களில் தனது பக்தர்களிடத்தில் அன்பு வைத்து, ஜனங்களைத் துக்கத்திலிருந்து நிவிர்த்தி செய்விக்கிறார். மேல்நாட்டு நாகரீகத்தினாலும் மற்றக் காரியங்களாலும் ஈனகதி படைத்த காலத்தில் சாது இரத்தின செட்டியார் தோன்றி அனேகருக்கு வேதாந்தவிசாரணை செய்யும்படி செய்தார். நமது சுவாமிகளும் அவருடைய உபதேசத்தினால் நன்கு விசாரணை செய்தனர். நாடோறும் தனது அனுஷ்டானங்களிலும் உலகப்பற்றில் வீழ்ந்த சென்னைவாசிகளுக்கும் மற்றப் பிரதேசவாசிகளுக்கும் உதவினார். தனது வைராக்கியத்தினாலும், அன்பினாலும், வேதாந்த பாடங்களினாலும், வடமொழியில் எழுதியுள்ள அனேக வேதாந்த நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்தும், அனேக தமிழ் நூல்களைத் தொகுத்து எழுதியும் நமது தமிழ் மக்களுக்குத் துக்க நிவிர்த்திக்கான வழியைக் காட்டினார். ஜனங்களிடத்திலிருக்கும் அஞ்ஞானத்தையொழித்து அவர்களிடத்தில் ஞானோதய மாகுவதற்கென்றே ஸ்தாபிக்கப்பட்ட வியாசர்பாடி ஸ்ரீ கா. சிவப்பிரகாசசுவாமிகள் மடம் விருத்தியாகி அதில் அனேக சாதுக்கள் சேர்ந்து சாஸ்திரம் படிப்பதற்கும், ஈசுவரத்தியானம் செய்வதற்கும், வைராக்கியத்தைச் சாதிப்பதற்கும் இந்த மடத்தில் பழகினவர்கள் அனேகர் பல விடங்களுக்கும் போய் தமது ஞானத்தை உபதேசித்துத் துக்கக்கடலிலிருக்கும் மக்களுக்கு உதவுவார்களென்று சர்வேசுரனைப் பிரார்த்திக்கின்றோம்—(சாஸ்வதி: ஆசிரியர்.)

# ஶ்ரீ கர. சிவப்பிரகாச சுவாமிகள்

மெய்க்குருவை யடுத்திடுங்கா லவர்தம்மை விசா
ரித்து மேவவேண்டு, மெய்க்குருவுஞ் சற்குருவாய்ச்
சீடனும்வித்தா விழுக்கின்னட யில்லோனாகி, மிக்கபரவுணர்
வின்றிப் பக்குவமதை யிலாகி மேன்மைகூற, மக்குருவே
சற்குருவா மவனிடஞ்சேர்ந் தரிபபணி யாற்றனன்றே.

மண்போற் பொறுமை யுடையோரு மதிபோற் சாந்த
முடையோரும், புண்போ லுடலைப் புனைந்தோரும் புனல்
போ லொழுக்கம் பூண்டோரும், கண்போ லிரக்க முடை
யோருங் கனல்போற் புசிக்குங் கறியோரும், விண்போ
லறிவை யறிந்தோரும் பிறவா ரிந்த மேதினிக்கே.

அன்பே வடிவமான இம்மகாத்மா வீரசைவத்தை மேற்கொ
ண்டுள்ள பத்தர் குலத்திற் றோன்றியவர். இவர் மருந்துண மக
ரிஷி கோத்திரத்தைச்சேர்ந்த முத்துசாமி பத்தரும், வள்ளி
யம்மையாரும் செய்த பூர்வ புண்ணிய விசேஷத்தால் அவர்
கட்கு அருந்தவப் புதல்வராகச் சென்னியப்பாக்க மென்னுங்
கிராமத்திற் பிறந்தவர். பாலியப் பருவந் தொடங்கியே சம
தமாதி குணங்களை யுடையவராக விருந்து ஞான நூற்களை
யே யோதி யுணரும் பக்குவம் வாய்ந்தவராக விருந்தனர்.
சுவாமிகள் தம் குலத்தொழிலிற் பிரவேசியா திருந்தமையைக்
கண்ட இவரது மூத்த சகோதரர், அவர் நன்மார்க்கத்திற்
செல்லுதற்குப் பெரிதும் தடைசெய்து வந்தனர். ஆயினும்,
அவர் தம்பிறவிப் பெரும்பயனை யடையும் நோக்கமுடையவ
ராயிருந்து, சென்னையில் ஞான பானுவா யெழுந்தருளியி
ருந்த சாது. இரத்தின செட்டியார் சற்குருவின் சன்னிதா
னத்தை யடுத்து ஞானப்பியாசம் பெற்று (உலகப்பற்றின்றி)
யொழுகுவாராயினர்; தமது குரு பரிபூரண தசையை

படைந்தபின் "எல்லார்க்கும் காலன் றுறவீவன் சபாமுன் நல்லோர் துறப்பர்" என்னும் மெய்யுரையை மேற்கொண்டவராய் (1904-ம் வருடத்தில்) தமது சகோதரர் வீட்டினின்றும் புறப்பட்டுச் சென்னையை யடுத்துள்ள திருவான்மியூர்க்குச்சென்று கடுந்துறவைமேற்கொண்டு மௌனவிரதம்பூண்டு நிஷ்டை சாதித்திருந்தனர். இந்நிலையிலிருந்த இவர் பிறர்க்குப் பயன்படாதிருப்பதனைக்கண்ட மேற்படி இரத்தின சற்குருவினிடத்து ஞானாப்பியாசம் பெற்றுவந்த அவருடைய சகாக்கள், மூலையிலிருந்தவரை முற்றத்தி லிழுத்து விடுவது போல, அவரைச் சென்னையின்கண் அழைத்து வந்தனர். அக்காலம் (1904-ம் வருடம்) தொடங்கி அவர் சென்னையின்கண் எழுந்தருளி யிருந்து ஞானநூற்களைப் பலர்க்குப் போதித்து வந்தனர். இவர்க்குச் சிஷ்யர்கள் நூற்றுக்கணக்காகப் பெருகினர். இவர் இச்சம்சாரம் பெருகுவது தமது நிஷ்டைக்குத் தடையா யிருக்கின்றதென்று கருதிச் சென்னையைவிட்டு நீங்கினர். அவர் சென்ற நெறி அறியாராய்ச் சிஷ்யர்கள் நெடுங்காலம் அவரைத் தேடிக் காணாதலைந்து முடிவிற் பொதிய மலையிற் கண்டு தரிசித்து, சென்னைக்கெழுந்தருளுமாறு மன்றாடிக் கேட்டுக்கொண்டனர். சுவாமிகள் இயற்கையிலேயே சாந்தமும், பூததயாளமு முடையவராகலின், அவர் தம் வேண்டுகோளுக் கிணங்கிச் சென்னைக் கெழுந்தருளினர். சுவாமிகள் மண், பெண், பொன் என்னும் ஈஷணாத் திரயங்களை ஒட்டுப்பற்றின்றி வெறுத்துக் கடுந்துறவு பூண்டிருந்தமையின், அவர்பால் சென்னையில் பல சீமான்களும் சீமாட்டிகளும் செல்வாராயினர். அவர்பாலடைந்து இஷ்ட சித்திகளைப் பெற்ற சில கனவான்கள் அவர்க்குச் சென்னை—சூளை, ஸ்ரீமான் T. செங்கல்வராய நாயகர் தோட்டத்தில் ஓராச்சிரமங் கட்டிக் கொடுத்தனர். மேற்படி நாயகர் குடும்பத்தினரும் சுவாமிகளின் அருங்குணங்களைக் கண்டு, தமது தோட்டத்தில் சுவாமிகளுக்கு ஓராச்சிரமங் கட்ட விடந்தந்தனர். சுவாமிகளவ்வாச்சிரமத்தில் தனியேயிருந்து நிஷ்டை சாதித்து வந்தனர். சுவாமி

கள்பசிர்ழுதியாம் காலங்களில் தம்மை வந்தடைந்தவர்கட்கு ஞான நூற்களைப் போதித்து வந்தனர். சுவாமிகள் சென்னையில் அத்வைத வேதாந்தம் பரவவேண்டுமென்னும் பெரு நோக்கமுடையவராய்ச் சென்னை ஆநந்தாச்சிரம சாது மகா சங்க மென்றொரு சங்கத்தை யேற்படுத்தினர். அது 12—வருடங்களாக மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றது. இது மிகப்பிரசித்தமானது. இந்த சங்கத்திற் கிப்போது நிரந்தரமான கட்டடமொன்றும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றது. சென்னையின்கண் வரும் சாதுக்களுக்கு, உண்டி உறையுள் முதலிய வசதியின்மையைச் சுவாமிகள் பெரிதுங்கவனித்து, அக்குறையை நிவர்த்தித்தற்பொருட்டு சென்னைக் கடுத்துள்ள வியாசர்பாடியில் புற்றிற்குப் பால் வார்க்குந் தோட்டத்தை (7-காணி) வாங்கி அதில் சாதுக்கள் தங்குவதற்குப் போதிய கட்டடங்களைக் கட்டுவித்திருக்கின்றார். இதுவரைக்கும் இவ்வழிகளில் சுமார் 3000 ரூபாய் செலவு செய்யப்பட்டிருக்கின்றது. இங்கு சாதுக்களுக்குச் சமஸ்கிருத பாடசாலை முதலியவற்றை யேற்படுத்துவதற்கு வேண்டிய யோசனைகள் செய்யப்பட்டு வந்தன. மேற்படி தோட்டத்திலும், செங்கல்வாராய நாயகர் தோட்டத்திலும், சாதுக்கள் பலர் வருதல் போதலுடையாராயினர். அவர்கட்கு வேண்டிய உபசாரங்களெல்லாம் நடத்தப்பட்டு வந்தன. தினந்தோறும் 20 சாதுக்களுக்குக் குறையாமல் வியாசர்பாடி ஆநந்தாச்சிரமத்திலும், சென்னைச் சாதுமகா சங்கத்திலும் தங்கியிருப்பதுண்டு. சுவாமிகள் சன்னிதான விசேஷத்தினால் எல்லாத் திருப்பணிகளும் குறைவின்றி நடந்துவந்தன. மேற்படி சாதுக்கள் சமஸ்கிருத பாடசாலை முதலிய திருப்பணிக்காக ஒரு லட்சம் ரூபாய் திட்டஞ்செய்யப் பட்டிருந்தது. வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைந்து விட்டாற்போன்று, சுவாமிகள் 1918-ம் ஞ எப்ரல் மாதம் 4-ந் தேதி குருவாரம் உதயாதி பூர்வம் 1-15க்கு ஒருமாதகாலமாகவிருந்த சுரநோயால் பரிபூரண தசையையடைந்து விட்டனர். ஆயினும், சுவவாமிகளின் சத்தியசங்

சற்பம் வீணாகாதன்றோ? அது சுவாமிகளின் ஸிஷ்ய கோடிகளுள் ஒருவரது மனத்திலாவது உற்பூதமாகாம லிராது காலக்கிரமத்தில் அது முற்றுப்பெறுவதாம். பயனோக்காது செய்யும் ஞானிகளின் சத்திய சங்கற்பங்களை முடிக்கப் பகவான் கங்கணங் கட்டிக்கொண்டு இருக்கின்றாரென்பது சாஸ்திர சம்மதமாகலின், நமது சுவாமிகளது சாது சம்ஸ்கிருத பாடசாலை முதலிய கைங்கரிய நோக்கும் அவர் தம் சிஷ்யர்களைத் தொடர்ந்து பற்றிப் பூர்த்தியாவதாம்.

சுவாமிகட்கு ஹேம வித்தை தெரியுமென்று கருதி அவரை யடுத்து ஏமாற்றமடைந்த சிலர் அவருண்ணும் அன்னத்தில் விஷங் கலந்துவிட முயற்சி செய்தனர்; ஆயினும், சுவாமிகள் தமது சரீரப் பாதுகாப்பில் திருஷ்டி யில்லாதவரா யிருந்தனர். சுவாமிகள் தம்மை நேரில் தூஷிப்பவரிடத்தும், புன்சிரிப்பும், இன்சொல்லு முடையவரா யிருந்தனரெனின், அவர் தம் அரிய பெரிய குணங்களை அளவிட்டுச் சொல்லுதல் கூடுமோ? மண், பெண், பொன் ஆசைகளை பற்றறத் துறந்த பெரியார்க்கு உயர்வு தாழ்வுகளில்லையென்பதனைச் சுவாமிகள்பால் நிதர்சனமாகக் கண்டனம். தம்பால் வரும் பல்லோரையும் உயர்வு தாழ்வு கருதாது சுவாமிகள் சகோதரரைப்போல் பாவித்து வந்தனரென்று கூறுவது மிகையாகாது. மேற்படி திருப்பணிகள் நிறைவேறுவதற்கு வேண்டிய பொருள் எங்கிருந்து வந்ததென்று ஒருவர்க்கும் இதுகாறும் விளக்கமாகத் தெரியாது. சுவாமிகள் ஒருவரையும் எப்போதும் ஒன்றும் கேட்டதில்லை. காந்தத்தின் சன்னிதானத்தில் இரும்பு சேஷ்டிப்பது போல, சுவாமிகளின் சன்னிதானத்தில் எல்லாம் குறைவின்றி நடந்தேறி வந்தன. வருடந்தோறும் ஸ்ரீ சங்கர ஜயந்தி சித்ரா பௌர்ணமி மகோற்சவ முதலியன மிகச் சிறப்பாக நடந்தேறி வந்தன. சென்னைச் சாது மகா சங்கத்தோட்டத்தில் மங்கள வாரந்தோறும் சுவாமிகள் வேதாந்த பாடம் நடத்தி வந்தனர்; இவ்வழியால் ஆயிரக் கணக்கான ஜனங்

கட்கு வேதாந்த சாஸ்திரங்களில் சிரத்தையும், ஈசவரோபாசனையில் விருப்பமும், சாதுக்களிடத்தில் பக்தியும் பெருகுமாறு செய்து வந்தனர். இவ்வாறுய சேவைகளில் ஒழுகிவந்த ஸ்திரீ புருஷர்களெல்லாம் சற்குருமூர்த்தி சேவையின்றித் திகைப்புறுவாராயினர். ஸ்ரீ சங்கர பூஜ்ய பகவத் பாதாசாரிய சுவாமிகளவர்கட்குக் கோயிலொன்று வியாசர்பாடி ஆநந்தாஸ்ரமத்திலும் சென்னை ஆனந்தாஸ்ரமத்திலும் கட்டவேண்டுமென்பது சுவாமிகளின் நோக்கங்களிலொன்றாகும். அந்த நோக்கம் முற்றுப்பெறாது போனது பெரியதொரு நஷ்டமாம். சுவாமிகள் அத்வைத வேதாந்த அபிவிருத்தியின்பொருட்டுச் சம்ஸ்கிருத ஹிந்தி பாஷைகளிலிருந்து பல அரிய நூல்களை வெளியிடச் செய்திருக்கின்றனர்; வேதாந்த மனன சிந்தாமணி யென்னு மொரு பெரியநூலைப் பல நூற்களினின்றுந் திரட்டி யச்சிட்டு வெளியிட்டிருக்கின்றனர். ஞான சாதக சஹாயமென்னும் ஒரு நூலைச் சாதுக்கள் பொருட் டெழுதி யச்சிட்டு வெளியாக்கி யிருக்கின்றனர். அத்வைத வேதாந்தம் சென்னை முதலிய விடங்களில் பரவச்செய்வதற்குச் சுவாமிகள் பெருமுயற்சி செய்து வந்தனர். திடீரென்று சுவாமிகள் பரிபூரண தசையை யடைந்தது வேதாந்தத்திற்கே ஒருபெரிய நஷ்டமாகும். இவருக்கு வயது 45. இம் மகாத்மா சாது மகாசங்கம் ஏற்படுத்தியபின், சாது மகா சங்கம் பல விடங்களிலேற்பட்டு நடைபெற்று வருகின்றன. சுவாமிகள் தம் வாழ்நாள் முற்றும் பிரமசரிய விரதத்தையே மேற்கொண்டிருந்தார்; யாவரும் வியந்து போற்றத்தக்க காமஜித்துவாயிருந்தார். சுவாமிகளுடைய நோக்கங்களைப் பூர்த்தி செய்வதற்குரிய மூர்த்தியைப் பகவான் சீக்கிரம் அருள்புரிதல் வேண்டுமென்று நாம் எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திப்போமாக.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

26-3-21.

K. நாராயணசாமி நாயுடு.

ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள்
(அருளிய)

# விவேக ஷட்கம்

அனித்திய பூதத் தேகமா மன்று
விந்தியத் தாங்கா மன்று
னித்தவாங் காரப் பிராணவர்க் கங்க
ளன்றுநற் புந்தியு மன்று
தொனித்திடுந் தார மனைசெல்வங் களுக்குந்
தூரமாஞ் சாட்சியா மென்றும்
தனித்துநித் தியமாய்ப் பிரத்தியகான் மாவாஞ்
சற்பதப் பொருளதாஞ் சிவோகம். 1

உற்பவன் விருத்த நன்றுநா ஞேர்கா
லத்திலு நசிப்பவ னன்று
வற்பமாந் தேக காரிய மான
வவையெலா மகங்காரத் தல்லாற்
றற்பத வடிவாஞ் சின்மயா மின்
னெனக்கில்லை சகளநிட் களமா
யெப்புறத் தேனு மெல்லையற் றிருக்கு
மின்பசிற் சொருபமாஞ் சிவோகம். 2

சத்திய ஞான னந்தமாம் பிரமத்
துதித்திடு மாயையிற் சனித்த
மெத்துமிவ் வுலகஞ் சேதனத் திடையே
நசிக்குமதே தென விளம்பிற்
றத்துசொப் பனமுஞ் சுழுத்தியி லசத்தாந்
தன்மைபோற் சத்திலா திருக்குஞ்
சுத்த பூரணமாய் நித்திய மாகித்
துலங்கிய சொரூபமாஞ் சிவோகம். 3

## விவேக ஷட்கம்

பழுதைதன் னிடத்திற் பாம்புதோன் றுதல்
பரப்பிர மத்திடை யதனிற் (போற்
கழிதரு மஞ்ஞா னத்தினுஞ் சிவ
னுதித்திடக் கண்டவ னொருவன்
பழுதையென் றதனுஞ் சம்பமோ தமும்போ
பழுதையாய்க் கண்டது போல (ய்
வழுவிறே சிகனர் சிவனி யன்றென்
றமைந்திட லாயினேன் சிவோகம். 4

எமக்குமன் னியமா முலகமொன் றில்லை
யெவ்வுல கங்களெம் மிடத்திற
சமித்துவும் பவமா மாதலான் மாயை
வடிவம தேதெனிற் சாற்ற
வமைத்தகன் றாடி விம்பமா மிழல்போல
லம்மியெம மிடத்தினில் விளங்குக்
றழிவில்லாச் சச்சிதா னந்த
[illegible]ன் சிவோகம் 5

சாக்கிர மதனி லிந்திரி யங்க
டமக்குமேம் சாட்சியாஞ் சிவோகம்
தேக்குசொப் பனத்தி லுலகரு பமதாய்ச்
செப்பனைச் சாட்சியாஞ் சிவோகம்
தாக்கிய சித்த நாசமாஞ் சுழுத்தி
யவத்தையிற் சாட்சியாஞ் சிவோகம்
நீக்கமி றுரியா னந்தமாஞ் சர்வ
நிர்மல சாட்சியாஞ் சிவோகம். 6

---

# துறவறத்தின் பெருமை

சரஸ்வதி:—அக்காள்! மனிதர்களாகிய நாம் எல்லோரும் புருஷார்த்தத்தை அடைய வேண்டு மென்பார்களே! இந்தப் புருஷார்த்த மென்பதென்ன ?

தையல்நாயகி:—தங்காய்! உனக்கேன் இந்தப் புருஷார்த்தப் பேச்சு? நீ என்ன? இந்தப் புருஷார்த்தத்தை அடையப் போகிருயா? புருஷார்த்த வழியைத் தவறி நீச உலக வாழ்க்கையிற் புரளும் உனக்கு புருஷார்த்தத்தினுல் அடைய வேண்டிய தென்ன?

சரஸ்:-அக்காள்! நீ எண்ணுவதுபோல் நான் அவ்வளவு நீச கதியி லில்லை. ஒருவேளை என் நிலைமை அப்படியே என்று நீ எண்ணினுலும் நான் மேற்கதி அடைய வேண்டாமா? உத்தமிகளான உன்போன்ற சகோதரிகள், சம்சார பந்தத்திலிருந்து நிவிர்த்தி யடைய ஆவலுடைய எனக்கு உதவ வேண்டாமா?

தையல்;—அம்மணி! நான் என்னமோ எண்ணினேன். உன்னை ஒரு விளையாட்டுப் பெண்ணுகப் பாவித்தேன். இது நான் செய்த பெரிய பிசகு. என்னை நீ மன்னிக்கவேண்டும். மனிதர்களாகிய நாம் நமது புருஷார்த்த மடைந்து மேற்கதியடைய இச்சிக்கும் உன் கேள்விக்கு மெச்சினேன். கவனித்துக் கேள். எனக்குத் தெரிந்த மட்டும் சொல்கிறேன். ஜீவர்களில் மக்கள் பகுத்தறி வுடையவர்கள். தமது தர்மம் இன்னதென் றுணர்ந்தவர்கள். தன் நிலைமையை தானறிந்து தன் கடமை செலுத்துவதே புருஷார்த்த மாகும். இதையே நான்கு விதமாகப் பிரிப்பார்கள். அறம் பொருள், இன்பம், வீடு, என்று புருஷார்த்தம் நான்கு.

சரஸ்:-இவைகளை விவரித்துச் சொல்.

தையல்:-அறம், தருமம், நெறி, கடமை என்றுலும் ஒன்றே. நாம் செய்ய வேண்டிய தருமங்களே அறமெனப் படும். மண், பொன், முதலியவைகளைச் சம்பாதித்தல் பொருளாகும். காமம், இச்சை, இன்பம் என்றுலும் ஒன்றே

பலவிதமான இச்சைகளை அனுபவித்தலே இன்பமாகும். வீடெனினும் மோக்ஷ மெனினும் பொருந்தும். எவ்வித துன்பமின்றிப் பிரம்மானந்த மயமாக நித்திய சுகஜீவிகளாக வாழுதலே மோக்ஷ மெனப்படும்.

சரஸ்:-இதென்ன விபரீதமாகப் பேசுகிறாயே! ஒன்றுந் தெரியாமலே அறம், பொருள், இன்பம், என்னும் மூன்று புருஷார்த்தங்கள் வீடென்னும் புருஷார்த் தத்திற்குத் தடையென்று சுவானுபூதி யடைந்த ப்ரம்ம ஞானிகள் கூறுகிறார்களே! நீ சொல்லும் இவைகளெல்லாம் எப்படிப் புருஷார்த்த மாகும்?

தையல்:-நீ சொல்லுவது சரிதான். அப்பெரியோர்களின் ஹித போதனைகளை நீ முழுவதும் கவனித்ததாகத் தோன்ற வில்லை. நான் சொல்வதும் அந்த மஹாத்மாக்களின் வாக்கே யாகும். அவருடைய இதோப தேசங்களை நீயும் பக்தியோடு கவனித்துக் கேட்டிருந்தால் நீ இவ்விதமான கேள்வி கேட்க மாட்டாய்.

சரஸ்:-நான் அனேக பெரியோர்களைத் தரிசித்தவள். அவருடைய உபதேசங்களைக் கேட்டவள். அனேகவேதாந்த நூல்களையும் மற்ற சாஸ்திரங்களையும் படித்து ஆராய்ச்சி செய்தவள். இவைக ளெல்லாம் என்ன கோஷிக்கின்றன? மோக்ஷ மொன்றே புருஷார்த்தம் என்றும் விஷயங்களைத் துறந்தா லொழிய, ஒருவன் மோக்ஷகதி அடைவதில்லை என்றும் உரைக் கின்றன.

தையல்:—முடிவில் எல்லா வற்றையும் துறந்தே மோக்ஷத்தை அடையும் வீடென்னும் புருஷார்த்தமே புருஷார்த்தம். ஆயினும் மற்றவைகள், புருஷார்த்த மன்றென்று சொல்ல வேண்டாம். இந்தப் புருஷார்த்தங்களை அடைய எத்தனிப்பவர்கள் மோக்ஷத்திற்குத் தடை யின்றி அதற்கு அனுகூலமாகவே இருக்க வேண்டும். உலக வாழ்க்கையில் அதற் கொத்த நீதிகளும் பொருளும் போகமு மில்லாமல் வாழ்வ தரிது. இந்தத் தாழ்ந்த புருஷார்த்தத்தை அண்டாந்

தும் உலக வாழ்க்கையில் நடக்கும் உலக விஷயங்களில் பற்றற்றும் இருக்க வேண்டும். தன்னாற் செய்யப் பட்ட கூண்டுக்குள்ளகப்பட்ட பட்டுப் பூச்சி காலக்கிரமத்தில் கூண்டை உடைத்துப் பறப்பது போல் நாமும் ஒரு நாள் வீடெனும் சிறந்த புருஷார்த்தத்தை அடைய வேண்டும்.

சரஸ்:- ஏன் மோக்ஷத்தை ஓர் சிறப்பான புருஷார்த்த மென்று சொல்லுகிறாய்?

தையல்:- இதன் பதில் நீயே அறிந்துளாய். யோசித்துப்பார். யார்தான் பந்தத்திற் குட்படுகிறார்கள்? ஒரு பறவையை யாவது விலங்கை யாவது கூண்டுக்குள்ளே வைத்தால் அதற்கு வெட்ட வெளியில் தன் இஷ்டப்படி சுத்துவதற்குப் பிரியம். எந்தப் பந்தத்திற்கும் அவைகள் உட்படுவதில்லை. பகுத்தறிந்த மனிதனும் தான் ஓர் அபராதம் செய்த காலத்திலும் ராஜாவின் கட்டளைப் படி காராக்கிரஹத்தைப் பிரவேசிப்பதற்கு இஷ்டப்படுவதில்லை. ஒரு வேளை பிரவேசித் தாலும் விடுதலை காலத்தை இடைவிடாமல் நினைத்துக் கொண்டே வருவான். அப்படியே நீதி தெரியாத ராஜாவின் அதர்மமான கட்டுப்பாடுகளுக்கும் அவைகளால் நேரிடும் பல விதமான துன்பங் களுக்கும் உட்பட எந்தப் பிரஜைகளும் விரும்புவ தில்லை. ஆகவே ஒவ்வோர் ஆணும் பெண்ணும் உலகிலுள்ள சர்வ ஜீவாசிகளும் சுதந்திரிகளாய் துக்கமின்றி நித்தியானந்த பதவியடைவதற்கே விரும்புகிறாரொழியப் பந்தத்தை ஒருவரும் கோருவதில்லை. மோக்ஷ மென்பது நம்மவர்களில் ஒவ்வொருவனது இபறமைபான குணமென்றே சொல்ல வேண்டும்.

சாஸ்:- இது ஒவ்வொருவனிடத்திலும் இயற்கையாகவே இருக்கிறதென்றால் அதற்கென்று நாம் ஏன் முயல வேண்டும்?

தையல்:- சரியான கேள்வி கேட்டாய். ஆஹா! பகுத்தறிவுடையவரெனப்படும் மக்களின் தற்கால நிலைமை என்னவென்று சொல்லுவோம்! எல்லாம் தலைகீழாய் விட்டதே! மேல் கீழாகவும் கீழ் மேலாகவும் இருக்கிறதே! பாப புண்யம் இன்னவென்று தெரியாமலிருக்கிறதே! அறியாமல் ஜனங்கள் சுகத்தைத் துக்கமாகவும் துக்கத்தைச் சுகமாகவுங்கொள்கிறார்களே! இவர்களிடத்தில் என்ன பிரமை! என்ன அஞ்ஞானம்! ஈசன் கிருபையினாலேயே ஜனங்களிடத்தில் அகோரமான அஞ்ஞான மொழிந்து ஞானம் பிராப்தியாக வேண்டும். உலக மாயையினால் நாம் நமது இயற்கைக் குணத்தை அழித்தோம். இழந்த நமது தர்மத்தை நாம் அடையும் வரையில் மோக்ஷ சாதனைக்கு வேண்டிய முயற்சிகளெல்லாம் செய்தல் வேண்டும்.

சாஸ்:—இந்த முயற்சிகளென்ன ?

தையல்:-இந்த முயற்சிகள் பல வகை. பலருக்குப் பல மனம்.மனதுக்கொத்தவாறு அவர்களின் வாசனை .. அவரவர்களின் நிலைமைக்கொத்தவாறு இந்த முயற்சிகள் வேறுபடும். எல்லாருக்கும் ஒரேவழி சரிப்படாது. ஆயினும் எல்லோருக்கும் பொதுவாகச் சில நிபந்தனைகள் இருத்தல் வேண்டும். கல் மேல் எழுதப்பட்ட எழுத்துக்கள் போல உறுதியாக நமக்கு ஒட்டிக்கொண்ட உலக துர்வாசனையை ஒழித்துப் பிரம்ம வாசனை அடைய தீர்க்க கால அப்பியாசம் வேண்டும். ஈஸ்வரபக்தியும் குருபக்தியும் எல்லோருக்கும் பொது. துர்வாசனை பலமாக இருப்பவர்களுக்கு ஹட யோக அப்பியாசம் கட்டாயம் வேண்டும். மற்றவர்களுக்குத் தகுந்தவாறு கர்ம யோகம் அல்லது ஞான யோகம் சாதனையாகும். ஆரம்பத்தில் யார் எந்தச் சாதனை எவ்விதமாகக்

கைக்கொண்டாலும் எல்லா யோகங்களுக்கும் தலைமை யாய் விளங்கும் ஞான யோக மென்னும் ராஜ யோகத்தி லேயே ஒவ்வொரு முமுக்ஷுவும் நிலைக்கவேண்டும்.

சாஸ்:- இந்தப் பல சாதனைகளை விவரித்துச் சொல்.

தையல்:-"மோக்ஷ சாமக் கிரியாம் பக்தி ரேவ கரியசி மோக்ஷ சாதனைகளில் பக்தியே விசேஷ மானது. ஒருவனி டத்தில் குரு பக்தியும் சாஸ்திர பக்தியும் பலமாய் இருத் தல் வேண்டும்.

'சாஸ்திரேஷு குருவாக்யேஷு சத்திய புத்யவதாரணு
சா ச்ரத்தா கதிதா யயா வஸ்துபலப்யதே"

அதாவது, சாஸ்திரத்தையும் குருவாக்கையும் உண்மை என்று நம்புதலே சிரத்தை அல்லது பக்தி யெனப்படும். இதனாலேயே மோக்ஷம் லபிக்கும். நித்யாநித்ய வஸ்து விசா ரணை செய்து வைராக்கிய சீலராய், பொறுமை, க்ஷமை இந் தக் குண முடையவராய், தம்மை யடைந்த சீடர்களின் துக்கத்தை நீக்கி அவரை நித்ய பிரம்மானந்த நிலையில் வைக்கக் கூடியவர் குரு ஸ்தானத்தில் இருப்பவ ராவர்.

சாஸ்:- மோக்ஷ சாதனைக்கு இந்தக் குரு சாஸ்திரம் மாத்திரம் போதுமா? மற்ற எந்தச் சாதனைகளும் வேண் டாமா?

தையல்:- குருவும் சாஸ்திரமும் முமுக்ஷுக்கு ஆப்தர்க ளாகையாலும் இவனுக்கு வேண்டிய தெல்லாம் இவைகளி லேயே இருப்பதனாலும் இந்தக் குரு சாஸ்திர பக்தியே போதும். இவ் விடத்தில் பக்தி என்றால் ஒன்றைக் கேட்டு அதற்கு மற்றொன்றை முரணாகப பழகுதல் என்னும் எண் ணங் கொள்ளலாது. குருவும் சாஸ்திரமும சொல்லும்படி இவன் காரியத்தில் நடக்க வேண்டும். இவனிடத்தில் வைராக்கியமும் விசாரணையும் தீவிரமாயிருத்தல் வேண் டும். சாஸ்திரத்தைக் கேட்டும் அதனை ஓதியும் குரு சன் னிதி யடைந்தும் தீவிர விசாரணை வைராக்கிய மில்லாத வன் சார மில்லாத புருஷனாவான்.

சாஸ்:—இந்த விசாரணை வைராக்கியமென்றுலென்ன ?

தையல்:— நித்ய மெது, அநித்ய மெது, சுக மெது, துக்கமெது என்னும் ஆராய்ச்சியே விசாரணையாகும். துக்கத்துக்கு ஹேது வாகும் விஷய போகங்களைத் துறந்து விடுவதே வைராக்கிய மாகும்.

'விஷயாசா மஹாபாசாத் யோ விமுக்த: ஸுதுஸ்த்யஜாத் ஸ ஏவ கல்பதே முக்த்யை நாந்ய ஷட் சாஸ்த்ர வேத்யபி'

அதாவது, ஆறு சாஸ்திரங்களை ஓதினாலுங் கூட விஷ யாசையி னின்று நிவிர்த்தி யடையா விட்டால் அவன் மோக்ஷ கதி அடைவ தற்கு யோக்ய னல்லன். ஆகவே உண்மையாக மோக்ஷத்தை விரும்புகிறவன் குருவை அடைந்து, அவர் உபதேசத்தைக் கேட்டு சுகதுக்க விசாரணை செய்து உலகப் பற்றை விட்டுத் துறவி மார்க்கத்தில் நடக்க வேண்டும்.

சாஸ்:— உலகில் சம்சார வாழ்க்கையி லிருந்து மண் பெண் பொன் முதலிய சுக போகங்களை அனுபவித்துக் கொண்டும், மோக்ஷ மடையலா மென்றும் சொல்லுகிறார்களே ! அப்படியிருக்கக் கஷ்டமான துறவி மார்க்கத்தை ஏன் ஒருவன் கைக்கொள்ள வேண்டும்? திரு வள்ளுவர் ஜனகர் முதலிய பெரியோர்கள் இல்லற வாழ்க்கையிலிருந்தே ஜீவன்முக்த புருஷர்களாக இருந்தார்களென்று அப்பெரியோர் களின் சரித்திரம் சொல்லுகிறதே! எந்த சௌகர்யமும் இல்லாத துறவி மார்க்கம் நமக்கேன் ?

தையல்:— உன் நியாயம் சரிதான். ஒருவன் இல்லறத்திலிருந்தோ துறவறத்திலிருந்தோ விஷயப்பற்றின்றி தீவிர வைராக்கிய புருஷனுயிருத்தல் வேண்டும். யாரோ லக்ஷத்தில் ஒருவன் மாத்திரம் உலக விஷயங்களிலிருந்தும் அதில் பற்றுதலில்லாமலிருக்கக் கூடும். மற்றவர்களெல்லோரும் உலக விஷயங்களை விலக்கி விட்டா லொழிய விஷயப் பற்று அவர்களை விடுவதில்லை. ஆகையினுல் பிரம்மசரிய கிரகஸ்தம், வானப்ரஸ்தம், சன்னியாசம் என்னும் நான்கு ஆச்சிரமங் களுக்குள் துற வவறமே சிறந்தது.

சாஸ்:- ஏன் துறவறத்தை இவ்வளவு சிறப்பாகக் கூறுகிறுய்? இல்லறத்தாரின் உதவி இன்றித் துறவிகள் என்ன செய்யக் கூடும்? அவர்கள் தங்குவதற்கு வீடு குடும்பி தானே கட்டிக்கொடுக்க வேண்டும்? சம்சாரிகள் கஷ்டப் பட்டுச் சம்பாதனை செய்து சமைத்த புசிப்பில்லாமல் இருக்க சந்நியாசி எப்படிப் பிழைக்கக் கூடும். அவனுக்குக் கட்டத் துணியும் இவர்கள்தானே கொடுக்க வேண்டும். எவ்விதத்திலும் சம்சாரிகளின் உதவி யின்றித் துறவி வாழவே முடியாதாகையிஞல் அவன் எப்படி உன்னத ஸ்தானம் அடைகிறுன்?

தையல்:- நீ உன்னுடைய நிலைமையி லிருந்தே பேசு கிறுய். வெளி வேஷத்தில் மாத்திரம் சந்நியாசிக ளென்று சொல்லிக் கொண்டு திரியும் அனேகரைப் பார்த்து இப்ப டிப் பேசுகிறுய். மேலான நிலையி லிருப் பவர்களை நீ பார்க் காத காரணத் திஞலேயே இப்படி எண்ணுகிறுய்.

சாஸ்:— இதென்ன? சந்யாசி களிலும் மேல் சந்யாசி கீழ் சந்யாசி என்கிறுயே! துறவிகளிலும் மேல் கீழ் என்பது துண்டா?

தையல்:— நீ சந்யாசி ஆசிரமத்தைத் தெரிந்து கொண்டவளாகக் காணேன். நான் சொல்லுகிறேன். கவனித்துக்கேள். சந்யாசம் பாஹ்ய சந்யாசி என்றும் அந் தர் சன்யாசி என்றும் இரண்டு விதப்படும். ஓர் சற்குருவை அடைந்து பக்தியோடு வேதாந்த சாஸ்திர சிரவணம் செய்து தீவிர விசாரணையின் பயனுக வைராக்ய மடைந்து மண் பொன் பெண் பந்து மித்திரர்க ளென்னும் சர்வத் தையும் துறந்து குருபதேசத்தை அடைந்து கேசம், துணி நகைகளையும், எக்ஞோபவீதத்தையும் திரஸ்கரித்து எந்தச் சம்பாதனையு மில்லாமல் கேவலம் பசி தணிப்பதற்கு மாத் திரம் பிக்ஷாகாரத்தைக் கைக்கொண்டு துறவி வேஷம் பூணுதல் வேண்டும். இதுவே பாஹ்ய சந்யாச மாகும். மனதில் எவ்விதமான ராக துவேஷ மின்றி

அகங்காரம் மமகார மில்லாமல் தான் தனியே ஜீவனென்னும் அஞ்ஞான மொழிந்து 'அஹம் ப்ரம்மாஸ்மி' என்னும் ஞானோபதேசத்தை அனுபவத்திற்குக் கொண்டு வரக்கூடிய உள்வேஷமே அந்தர் சந்யாசம் எனப்படும். இந்த துறவியே ஞானி எனப்படுவர். அவருக்கு இல்லறத்தாரால் ஆகவேண்டியது ஒன்றுமில்லை. அவர்களிடத்திலிருந்து இடமாவது அன்ன வஸ்திரமாவது மற்றச் சௌகரியமாவது இந்தத் துறவிகள் எதிர்பார்ப்பதில்லை. வெட்ட வெளிப்பிரதேசமாவது அரண்யமாவது அவருக்கு சொந்த வீடு. காட்டிலவருக்குக் குடிக்க ஜலமும் தின்ன இலை, காய், கனி, கிழங்குகளும் அவருக் குண்டு. அவருக்கு எதிலும் பற்றுதலில்லை. அவருக்குத் துன்பமே இல்லை. ப்ரம்மானந்த மயமாக இருப்பார். தங்காய்! விசாரித்துப்பார். இந்தத் துறவிகளைப் போன்ற சிறப்பான வாழ்க்கை வேறெதுளது? தன்னிலைமையை சுவானுபூதியாய் தெரிந்து கொண்டு தனது அனுபவத்தை உலகத்தாருக்குப் போதித்து அவர்களையும் தம்போல துக்கத்திலிருந்து விடுதலை யாக்கக் கூடிய புண்ணிய காரியம் துறவியன்றோ செய்யக்கூடும்! ஆஹா! துறவறத்தின் சிறப்பை என்ன வென் றுரைப்பேன்!



# சுக வாழ்க்கைக்கு விதிகள்.

1. கடவுளைத் துதி
2. அகம்பாவனை ஒழி
3. மனக்கவலையை விடு
4. எல்லா உயிர்களிடத்திலும் அன்புடன் வாழ்
5. ஆசா பாசங்களை விடு.
6. தன்னால் இயன்ற மட்டும் உபகாரம் செய்- யாருக்கும் தீங்கு செய்யாதே
7. பிராணயாமம் முதலிய தேகப்பயிற்சி செய்
8. சுத்த தண்ணீரையே குடி
9. காப்பி, டீ, சோடா, கள், சாராயம் உபயோகிக்காதே

10. சைவ ஆகாரமே மிதமாகப் புசி

11. பசித்தே புசி

12. மாமிசம் உண்ணாதே

13. பிரம்மச்சரியம் காப்பாற்று

14. உலக டம்பத்திற்காக செல வழித்துக் கடன்காரனாகாதே

15. அபினி, கஞ்சா, புகையிலை கள்ளு, உபயோகிக்காதே

16. வேதாந்தவிசாரணை செய்து உன்னிலைமையை யறிந்து பிரஹ்மானந்த மயமாக வாழ்

## சரஸ்வதி சங்கம்

28, பிடாரியார் கோவில் தெரு, சென்னை

---

சரஸ்வதி சங்கம் அச்சுக்கூடம்.